7th March 1961]

SRI K. VINAYAKAM : Would the Government be pleased to allot the required number of boats if the people who applied for this allotment satisfy these conditions at least this year?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : There would be no difficulty if they satisfy the conditions.

MR. SPEAKER : Questions are over.

[*Not*.—**An asterisk (*) at the commencement of a speach indicates revision by the Member**].

II.—GENERAL DISCUSSION ON THE BUDGET FOR THE YEAR 1961–62—*cont.*

**MR. SPEAKER :** நாமெல்லோரும் எண்ணிக்கொண்டிருந்தது என்னவென்ருல் இன்றைய தினம் முதலில் கனம் அங்கத்தினர் ஸ்ரீ கல்யாணசுந்திரம் பேசலாம், அதன் பிறகு கனம் அங்கத்தினர் அண்ணுதுரை பேசலாம், அதன் பிறகு கனம் நிதி அமைச்சர் ஸ்ரீ சுப்பிரமணியம் விவாதத்திற்கு பதில் அளிக்கலாம் என்பது. ஆனல் கனம் அங்கத்தினர் கல்யாணசுந்திரம் ஏதோ சில தவிர்க்க முடியாத காரணங்களினல் சென்னைக்கு வரமுடியவில்லை என்று இன்றைய தினம் தகவல் வந்துள்ளது. ஆகையினல் அவர் பேசப் போவதில்லை. இப்போது கனம் அங்கத்தினர் ஸ்ரீ அண்ணுதுரை பேசுவார். அவர் பேசிய பிறகு நிதி அமைச்சர் அவர்கள் விவாதத் திற்குப் பதில் அளிப்பார்.

**SRI C. N. ANNADURAI :** சட்ட மன்றத் தலைவர் அவர்களே, இந்த ஆண்டு நிதி நிலை அறிக்கையைப் பற்றி என்னுடைய கருத் துக்களை எடுத்துச் சொல்லிக்கொண்டு போகின்ற நேரத்தில், அதிலுள்ள குறைபாடுகளை எடுத்துச் சொல்லுகின்ற அவசரத்தில் அமைச்சரவை செய்திருக்கின்ற சில நல்ல காரியங்களைப் பாராட்டாமல் விட்டு விடுவோமே என்ற பயத்தில் முதலில் இந்த அமைச்சரவை செய்திருக்கின்ற இரண்டொரு நல்ல காரியங்களை நான் மனதாரப் பாராட்டுகிறேன். ஜனநாயகத்திலே தங்களுக்கு இருக்கின்ற எண்ணிக்கை பலத்தை வைத்துக் கொண்டு அவர்கள் தமிழகத்திற்குச் செய்யவேண்டிய மிகச் சாதாரண கடமைகளைக்கூட விட்டு விடுவார்களோ என்று நாங்க ளெல்லாம் மன வேதனைப்பட்டுக்கொண்டு இருந்த பிரச்னையில் இந்த நாட்டுக்குத் தமிழ் நாடு என்ற பெயரை இந்த அமைச்சரவை சூட்டியிருப்பது, ஓரளவிற்கு அதில் சில குறைபாடுகளும் குந்தகங் களும் இருக்கின்றன என்ருலும் ஒரு நல்ல முயற்சியில் அடி எடுத்து வைத்திருக்கிருர்கள் என்ற அளவில் அவர்களை நான் பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறேன். அதைப் போலவே இலவசக் கல்வியை எல்லா ஏழை மாணவர்களுக்கும் 11-வது வகுப்பு வரையில் அவர்களுக்கு இருக்கின்ற இலவசக் கல்வியை அதிகப்படுத்துகின்ற திட்டத்தை ஏற்றுக்கொண்டிருப்பதும் பாராட்டத் தக்கதாகும். அவர்களைப் பாராட்டும் நேரத்திலேகூட இப்படிப்பட்ட காரியங்களைப் பற்றி எதிர் தரப்பிலே உள்ள கட்சிக் காரர்கள் ஆகிய . . .